




# அன்புமக்களே!

தமிழ்க் கத்தோலிக்க மாதாந்த வெளியீடு மார்கழி 2017. ஒளி 24. கதிர் 239
TAMIL CATHOLIC MONTHLY PUBLICATION DECE 2017 YEAR 24. VOL 239

நத்தார் புதுவருட
வாழ்த்துக்கள்.

# ஸ்தாபிதம்

ஆனிமாதம் 1995

## முகவரி



2625 Eglinton Ave EastUnit # 2nd floor
Scarborough. On. M1K 2S5

E-mail:-
Tamilcatholicpublication@gmail.com

தொலை பேசி (416) 265 - 5540
தொலைநகல் (416) 264 - 6353



**தயாரிப்பு வெளியீடு**
தமிழ்க் கத்தோலிக்க வெளியீட்டகம்..

**ஆசிரியர் குழு**
அருட் தந்தை யேசுறாஜன் மரியதாஸ்
திரு தோமாஸ் டேவிட்
சகோதரி மரினா அந்தோனிப்பிள்ளை

**ஆலோசனைக் குழு**
அருட் தந்தை அந்தோனிப்பிள்ளை தோமாஸ்
அருட் தந்தை ஹமலதாசன் அன்ரனி
அருட் தந்தை யோன் அருள்தாஸ்

**தொழில் நுட்ப உதவி**
திரு குணரெட்னம் நாகமுத்து
திருமதி யூலிற் வசந்தா குணரெட்னம்

**விநியோகஸ்த்தர்கள்**
கனடாத் தமிழ் கத்தோலிக்க தன்னார்வத் தொண்டர்கள்.

## கிடைக்கும் இடங்கள்

**ரொறொன்ரோவில்:-**
புனித அந்தோனியார் தேவாலயம்
லூர்துமாதா தேவாலயம்

**ஸ்காபரோ:-**
புனித மரிய கொறற்றி தேவாலயம்
தோமாஸ்மோர் தேவாலயம்
பொனிபஸ் தேவாலயம்

**ஜேன்&பிஞ்**
புனித ஒகஸ்ற்ரின் தேவாலயம்

**மிஸிசாக்காவில்:-**
சிற்றி சென்றர் வியாபார ஸ்தாபணங்களில்

**டொன்மில்ஸ்:-**
புனித 23ம் அருளப்பர் தேவாலயம்

**தமிழ் கத்தோலிக்க புதுவாழ்வுக் குழு**

**தமிழ் மொழிகற்கும் வகுப்புகள்**
**மெக்கா சிற்றி வர்த்தக ஸ்தாபனங்கள்**

## ஆதரவு

**கனடாத் தமிழ் கத்தோலிக்க சங்கம்.**


## ஆசிரியர் உரை.

அன்பு நெஞ்சங்களே,!

ஒளி விழா உலக சமாதானத்தை வழங்கு வதாக.

“உலகுக் ஒளி நீங்கள் உங்கள் ஒளி மனிதர் முன் ஒளிர்வதாக”
( மத் -5-14-16)

வருடா வருடம் நாம் கொண்டாடும் ஒளி விழா மனிதத்துவத்தில் அன்பையும் உறவையும் அதிகரிக்கும் அற்புத விழாவாக இதயங்களில் விடுதலைக்கு உதவுகிறது இதனால் உலகின் பல பாகங்கலில் இருந்தும் மக்கள் பரிமாறும் உறவுப் பாலமாக உள்ளது.

அன்பு என்பது கண்ணிலே பிறந்து, இதயத்தில் நுழைந்து, உயிரோடு கலக்கின்ற உறவு. இந்த அன்புறவை வளர்த்துக் கொள்ளத்தான் கடவுள் மனிதனானார். இறைவன் தன் அன்பை வெளிப்படுத்த பல முறைகளைக் கையாண்டார். பல நீதிபதிகளை அனுப்பினார். அரசர்களை நியமித்தார். இறைவாக் கினர்களை அனுப்பினார். இறுதியாக நம்மில் ஒருவராக, மனித்ராக உருவெடுத்தார். அதனால்தான் எபிரேயருக்கு எழுதிய திருமுகம் இவ்வாறு சொல் கிறது...." பற்பல முறையிலும் பல்வேறு வகையிலும் முற்காலத்தில் இறைவாக்கினர் வாயிலாக நம் முன்னோரிடம் பேசிய கடவுள் நாம் வாழும் இவ் விறுதி நாட்களில் நம்மிடம் தம் மகனின் வாயிலாகவே பேசியுள்ளார் (எபிரேயர். 1/1-2).

கிறிஸ்து பிறப்பு பெருவிழாவை கொண்டாடும் நாமும் மற்றவர்களை அன்பு செய்ய, அன்பை பகிர்ந்து கொள்ள அழைக்கப்படுகின்றோம். கிறிஸ்து எவ்வாறு பேரொ ளியாக, சுடரொளியாக மிளிர்ந்து, காரிருளையும், சாவின் நிழலையும் தகர்த்தெறிந்தாரோ அதேபோல கிறிஸ்து பிறப்பு விழாவைக் கொண்டாடும் நாங்களும் இருள் சூழ்ந்த இந்த உலகை ஒளி மயமாக்க எம்மை அர்ப்பணித்து வாழத் தயாராவோம். நாம் வாழும் சமூகத்தில்;

உள்ளம் உடைந்தவர்க்கு உரமூட்டும் ஒளியாக.......
சிறைப்பட்டவர்களுக்கு விடுதலை தரும் ஒளியாக.......
பசித்தவனுக்குப் பகிர்ந்து கொடுக்கும் ஒளியாக......விழி இழந்தவருக்கு வழிகாட்டும் ஒளியாக......ஆண்டவரின் அருளைப் பெற்றுத்தரும் அறிவின் ஒளியாக..... ஏழைகள்மீது மனமிரங்கும் ஒளியாக......இரக்கமற்ற வர்களை இளகச் செய்யும் ஒளியாக.....பாவிகளை மன்னித்து ஏற்றுக் கொள்ளும் ஒளியாக.....வழி தவறியவர்களின் முன்னின்று வழிநடத்தும் ஒளியாக....இன்னல் நீக்கி இருள் அகற்றும் ஒளியாக.....
அவனியில் அமைதியைப் பொழியும் ஒளியாக.....

நாம் மாற்றம் அடையும்போதுதான் கிறிஸ்து பிறப்பு பெருவிழா வழக்கமாக கொண்டாடுவதைப்போல் அல்லாமல் அர்த்தம் பெறும் விழாவாக அமையும். கிறிஸ்து பிறப்பு பெருவிழா நம் அனைவருக்கும் அன்பையும், மகிழ்ச்சியையும், சமாதானத்தையும் கொணர்வதாக .

நிர்வாக ஆசிரியர் தோமாஸ் டேவிட்

1.

# இயேசுவின் பிறப்பு அன்று மாடடைக்குடிலில் இன்று ஏழைகளின் இல்லங்களிலும் உள்ளங்களிலுமே!

இறைதந்தையின் திட்டத்தினாலும், இறைவாக்கினரின் முன்னறிவிப்பினாலும் மெசியா பற்றிய ஆழமான நம்பிக்கை இஸ்ராயேல் மக்கள் மத்தியில் வலுகாகப் பேசப்பட்டது. காலத்துக்கு காலம் பல்வேறு நாடுகளின் அடிமைத்தனங்களாலும், துன்புறுத்தல்களாலும் தங்களையே இழந்து, மாற்றானின் வழிச்செல்ல நிர்ப்பந்திக்கப்பட்ட மக்கள், இறைவன் தங்களை மீட்டு விடுதலை வாழ்வை மீண்டும் தருவார் என்ற நம்பிக்கையை கைவிடவில்லை. மெசியா பற்றிய அவர்களது எதிர்ப்பார்ப்பு வேறு கோணத்தில் இருக்க மெசியாவாகிய இயேசுவின் பிறப்பு வேறுகோணத்தில் அமைந்தது. இந்த உலகத்தில் தனது பெற்றோரை தேர்ந்தெடுக்கும் உரிமை எந்தவொரு மனிதனுக்கும் இல்லை. ஆனால் கடவுள் தன் மகனுக்கான மண்ணகப்பெற்றோரை தேர்ந்தெடுக்கிறார். அக்காலத்தில் அதிகார வர்க்கத்தினரும், சமூகத்தில் அந்தஸ்து மிக்க பெரியவர்களும் இருந்த போதிலும், இறைவன் ஏழைப்பெற்றோர்களையே தெரிந்தெடுக்கிறார். மெசியாவை அரசனாகவும், பெரிய வீரனகாவும் எதிர்பார்த்த இஸ்ராயேல் மக்களின் எதிர்பார்ப்புக்கு மாறாக ஆனால் திருச்சட்டத்திற்கும், இறைவாக்கினரின் முன்னறிவிப்புக்கும் உட்பட்டதாக தாவீதின் ஊராகிய பெத்தலகேமில் இயேசு பிறந்தார்.

இந்த மாபெரும் உலகத்தை உருவாக்கிய ஆண்டவருக்கு உலகில் பிறக்க இடமில்லை என்றால் மனிதரின் கொடூரம்தான் எம்மாத்திரம். மாளிகையில் பிறக்க வேண்டிய இறைமைந்தன் மாடடைக்குடிலில் பிறந்தார் என்றால் அவரது தாழ்மையும் ஏழ்மையும் மனிதர்களால் எண்ணிப்பார்க்க முடியாதவை. “இன்று ஆண்டவராகிய மெசியா என்னும் மீட்பர் உங்களுக்காக தாவீதின் ஊரில் பிறந்திருக்கிறார்” (லூக 2:11). ஏழைவடிவில் ஏழைகளுக்காக பிறந்த இறைமகனின் பிறப்புச்செய்தி முதலில் ஏழைகளுக்கே அறிவிக்கப்பட்டது. கடவுளை ஏழையாகப்பிறந்தவர் என ஏற்றுக்கொள்ள வேண்டும். செல்வராக இருந்த அவர் ஏழைகளாகிய நாம் செல்வராகும்படி நமக்காக ஏழையானார் (2கொரி 8:9). ஆனால் உலகம் அவரின் ஏழ்மையை உணர்ந்ததா? அவரது பிறப்பின் அர்த்ததைதானும் அறிந்ததா? ஏன் இறைவன் மனிதனானார் என புரிந்தது கொண்டதா?.....உலகம் இயேசுவின் போதனையை ஒதுக்கியது. தன்னுடைய மாயை நாடகத்தை ஆரம்பித்தது. அவரது போதனைகளை தூக்கி எறிந்தது. பேதமையால் அழிவை நோக்கி நகர்ந்தது. விளைவு........?

இன்றைய சமுதாயத்தை ஆழமாக ஊடுருவி நோக்கும்போது ஒரு மாபெரும் உண்மையை நாம் உணரமுடியும். யாதெனில் ஒருபுறம் மக்கள் வாழ்வுக்காக ஏங்குகின்றனர்; வாழ்வை முழுமையாகப் பெறுவதற்காகப் போராடுகின்றனர். மறுபுறம் மனிதர் அழிவை நோக்கிப் பயணமாகின்றனர். வுாழ்வுக்கும் சாவுக்கும், ஆக்கத்திற்கும் அழிவுக்கும், எழிச்சிக்கும் வீழ்ச்சிக்கும் இடையே மனித சமுதாயம் சிக்கித் தவித்துக்கொண்டிருக்கிறது. உலகத்தொடக்கத்திலே மனிதனோடு கூடிப்பிறந்த வன்முறை மனித வரலாற்றில் தொடர்ந்து அவனைக் காயப்படுத்தி செல்வது வரலாறு தரும் பாடம் மட்டுமல்ல இன்றைய யதார்த்த உலகிலும் நாம் அனுபவிப்பது வெளிப்படையுண்மை. மனித மாண்பை சிதைத்து, மனித உரிமையை நசுக்கும் எல்லா செயற்பாடுகளும் வன்முறையின் வெளிப்பாடுகளே. அகதி வாழ்வு, காரணமின்றிய சிறைவைப்பு, உரிமைகள் மறுக்கப்படல், பாலியல் துஷ்பிரயோகம், சீதனக் கொடுமைகள், சிறுவர் துஷ்பிரயோகங்கள், முதியோர் புறக்கணிப்பு, வறுமை, வேலையில்லாமை, சமூக சீர்கேடுகள், கலாச்சார அழிவுகள், ஆன்மீக வரட்சி என்பனதான் வன்முறை மனிதனுக்கு அளித்த வெகுமதிகள்.

இன்றைய உலகில் துன்புறும் ஏழைகளுக்கு ஆறுதல் நம் ஆண்டவர் இயேசுக்கிறிஸ்துவே. “ஏழைகளே நீங்கள் பேறுபெற்றோர்; ஏனெனில் இறையாட்சி உங்களுக்குரியதே” (லூக் 6:20). இந்த உலகத்திலே எங்களை ஏற்றுக்கொள்ள யாருமில்லையே, எங்கள் உணர்வுகளை புரிந்து கொள்வார் ஒருவர்கூட இல்லையே என்று மனவிரக்தியோடும், வேதனையோடும் எல்லாவற்றையும் இழந்து வறுமையில் வெறுமையோடு வாழும் எம்மக்களுக்கு ஆறுதல் தருவது இயேசுவின் ஏழைக் கோலம்தானே. இன்று வாழ்வுக்காக போராடிக்கொண்டிருக்கும் மக்களுக்கு, அன்றாட உணவுக்காக, வேலைவாய்ப்புக்காக அலைந்து திரியும் மனத உள்ளங்களுக்கு இயேசுவின் பிறப்புச் செய்தி ஒரு உற்சாகத்தையும் நம்பிக்கையையும் கொடுக்கும் என்றால் மிகையாகாது. இந்த ஏழைகளை தன்னுள் உள்வாங்க, தன் அன்பை அவர்களுக்கு கொடுத்து அவர்களை ஆறுதல்படுத்த அவர் மீண்டும் பிறப்பது துன்புறும் எம்மக்களின் தற்கால இல்லக்குடிசைகளிலும் உள்ளக்குடிசைகளிலுமே.

கிறிஸ்து பிறப்பு விழா கடவுளின் பேரன்பை எமக்கு வெளிப்படுத்தும் ஒரு மகத்தான பெருவிழா. கிறிஸ்துவின் பிறப்பு எமக்கு அருளும் கொடைகள் அன்பு, மகிழ்ச்சி, அமைதி என்பனவாகும். இக்கொடைகள் நிலையாக எம்மில் தங்க வேண்டுமாயின் நாம் கடவுளின் திருவுளத்திற்கு கிழ்ப்படிவுள்ளவர்களாக மாறவேண்டும். ஏழைகளை வாழவைக்க வேண்டும் அவர்களை அன்பு செய்ய வேண்டும். ஏழைகளில் இயேசுவை கண்டு மகிழும் நிலையை, துன்புறும் எம்சகோதரரின் முகத்தில் இயேசுவின் பிரசன்னத்தை கண்டு உறவுகொள்ளும் உன்னத நிலையை எங்களில் உருவாக்கிக் கொள்ள வேண்டும். இயேசு துன்புறும் எங்கள் உள்ளக் குடிசையில் வந்து பிறக்க எங்களை தயார் செய்து அமைதியின் வேதனை எங்களில் ஏற்று உலகில் அமைதியை கான புறப்படுவோம்.

அருட்தந்தை. றமேஸ் (அ.ம.தி)

(யாழ்ப்பாணம் இலங்கை)

1.

# கிறிஸ்மஸ் விழா சந்தோஷமான விஷயம்தான்

கிறிஸ்துமஸ் என்றவுடன் எல்லோருக்கும் முதலில் நினைவுக்கு வருவது கிறிஸ்துவ நண்பர்கள் வீட்டிற்கு சென்றால் கேக், தடபுடல் விருந்துதான். ஆனால் கிறிஸ்துமஸ் கொண்டாட்டம் துவங்கிய பின்னணியும், அதில் ஏற்பட்ட பல மாறுதல்கள் குறித்தும் பலருக்கும் தெரியாது. இயேசு கிறிஸ்துவின் பிறந்த தினம்தான் கிறிஸ்துமஸ் என்பது அனைவருக்கும் தெரிந்த ஒன்றுதான். ஆனால் இயேசுநாதர் எப்போது பிறந்தார், கிறிஸ்துமஸ் என்ற வார்த்தையின் பின்னணி ஆகியவை சுவாரஸ்யமானது. கிறிஸ்துமஸ் என்ற வார்த்தை "கிறிஸ்ட் மாஸ்" என்ற 2 வார்த்தைகளின் இணைப்பு மூலம் உருவானது. இயேசு கிறிஸ்து பிறந்த ஆண்டு சரியாக தெரியவில்லை என்பதால், கிமு 7க்கும் கிமு 2க்கும் இடைப்பட்ட காலத்தில் அவர் பிறந்திருக்கலாம் என்று வரலாற்று ஆசிரியர்கள் கருதுகின்றனர். அதேபோலவே யூதர்களின் பருவகாலம், நாள் காட்டிகள் மூலம் கணக்கிட்டு, ஒரு யூக அடிப்படையில் தான் டிசம்பர் 25ம் தேதி கிறிஸ்துமஸ் பண்டிகையாக கொண்டாடப்படுவதாக சில வரலாற்று ஆசிரியர்கள் தெரிவிக்கின்றனர். கிறிஸ்துமஸ் பண்டிகையை முதன் முதலில் 4வது நூற்றாண்டை சேர்ந்த மேற்கத்திய கிறிஸ்தவர்கள் கொண்டாடியதாக சில வரலாற்று குறிப்புகள் உள்ளன. ஆனால் வேறு சில பிரிவுகளை சேர்ந்த கிறிஸ்தவர்கள் அதற்கு மறுப்பு தெரிவித்து, ஜனவரி 6ம் தேதி இயேசு பிறந்ததாகவும் கொண்டாடினர். எப்படி இருப்பினும் கிறிஸ்துமஸ் பண்டிகை என்பதை உலகம் முழுவதும் கிறிஸ்தவ மக்கள் மிகச் சிறப்பான நாளாக கொண்டாடி மகிழ்கின்றனர். இந்தத் தினத்தை கிறிஸ்துவர்கள் விசேஷமாக கருதுவதால் அன்றைய தினம் பல புதிய பணிகளைத் தொடங்குவதையும் அவர்கள் வழக்கமாகக் கொண்டுள்ளனர். கிபி 800ம் ஆண்டு கிறிஸ்துமஸ் பண்டிகை அன்று, சார்லிமேனி என்ற பேரரசன் மன்னராக பதவியேற்றான். அதன்பிறகு கிபி 855ம் ஆண்டு இட்முண்ட் என்ற தியாகி மன்னராக மூடி சூட்டப்பட்டான். கடந்த 1066ம் ஆண்டு இங்கிலாந்து மன்னன் வில்லியம் 1 மன்னராக முடிசூட்டப்பட்டார். மேலும் 1377ம் ஆண்டு இங்கிலாந்து மன்னன் ரிச்சார்ட் 2 கிறிஸ்துமஸ் பண்டிக்கையை மிக விமர்சியாக கொண்டாடினார். கடந்த 1643ம் ஆண்டு இந்தோனேஷியாவில் கண்டுபிடிக்கப்பட்ட புதிய தீவுக்கு "கிறிஸ்துமஸ் தீவு" என்று பெயரிடப்பட்டது. இப்படி கிறிஸ்துமஸ் பண்டிகை நாட்டு மக்களிடையே பிரபலமடைந்து, பின்னர் உலகமெங்கும் விமரிசையாக கொண்டாடும் வழக்கம் உருவானது. கிறிஸ்துமஸ் பண்டிகை அன்று மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்ள பரிசுப் பொருட்களை பரிமாறி கொள்வதும், போட்டிகளை நடத்துவது என்று பல கோணங்களில் கொண்டாட்டம் விரிவடைந்தது. கிறிஸ்துமஸ் பண்டிகைக்காக முதன்முதலில் கிறிஸ்துமஸ் மரம் வைக்கும் வழக்கம், 1510ம் ஆண்டும் ரிகா என்ற இடத்தில் துவங்கியது. கடந்த 1836ம் ஆண்டு கிறிஸ்துமஸ் பண்டிகைக்கு அலபாமா என்ற பகுதியில் அரசு விடுமுறையாக அறிவிக்கப்பட்டது. 1840ம் ஆண்டு இங்கிலாந்தில் முதன் முதலாக கிறிஸ்துமஸ் வாழ்த்து அட்டைகள் அனுப்பும் வழக்கம் துவங்கியது. கிறிஸ்துமஸ் பண்டிகையின் போது கிறிஸ்துவர்கள் குழுக்களாக சேர்ந்து கேரல் சர்வீஸ் என்ற நிகழ்ச்சியை நடத்துகின்றனர். இந்த கேரல் நிகழ்ச்சியில் குழந்தை இயேசுவை வாழ்த்தியும், அவரது பிறப்பு, அவர் உலகில் வந்த நோக்கம் உள்ளிட்ட கருத்துகளை கொண்ட பாடல்கள் பாடப்படுவது வழக்கம். கடந்த 1847ம் ஆண்டு பிரான்சில் தான் முதல் முதலாக கிறிஸ்துமஸ் கேரல் சர்வீஸ் நடத்தப்பட்டதாக தெரிகிறது. இந்த கேரலில் "ஓ ஹோலி நைட்" என்ற பிரபல கிறிஸ்துமஸ் பாடல் பாடப்பட்டதாக கூறப்படுகிறது. கிறிஸ்துமஸ் பண்டிகையை ஒட்டி வரலாற்றில் சில ருசிகரமான சம்பவங்கள் நடைபெற்று உள்ளன. பண்டைய காலத்தில் வாழ்ந்த பாரசீகர்களும், பாபிலோனியர்களும் கிறிஸ்துமஸ் பண்டிகையை வருடத்தின் நல்ல நாளாக கொண்டாடி வந்தனர். கிறிஸ்துமஸ் பண்டிகை அன்று, பாரசீக நாட்டில் உள்ள எல்லா அடிமைகளுக்கும் ஒருநாள் விடுதலை அளிக்கப்படும். மேலும் சிலர் தங்கள் அடிமைகளை பரிசாக பரிமாறி கொண்டனர். சில எஜமான்கள் கிறிஸ்துமஸ் பண்டிகை அன்று மட்டும், அடிமைகளுக்கு வீட்டில் முழு சுதந்திரம் கொடுத்ததாகவும் வரலாற்றில் குறிப்புகள் உள்ளது. பண்டைய காலத்தில் வாழ்ந்த ஐரோப்பியர்களுக்கு பேய், பிசாசு, அசுத்த ஆவிகள் உள்ளிட்டவைகளுக்கு அதிகமாக பயந்தனர். வருடத்தில் நீண்ட இரவு கொண்ட நாட்களில் அவை மக்களுக்கு தீமை விளைவிக்கும் என்று நம்பினர். இதனால் நீண்ட இரவுகளுக்கு பிறகு சூரியன் உதிக்க வேண்டும் என்பதற்காக கிறிஸ்துமஸ் பண்டிகையை கொண்டாடி வந்துள்ளனர். மொத்தத்தில் நல்லது ஓங்கவும், அல்லது அழியவும் இந்த நன்னாளை உலக மக்கள் அனைவரும் ஒருங்கிணைந்து இயேசு பெருமானை இறைஞ்சி, துதி பாடி மகிழ்கின்றனர் என்பது சந்தோஷமான விஷயம்தான்.

1.

# கிறிஸ்து பிறப்பு விழா; கடவுளின் அன்பை வெளிப்படுத்தும்

"காரிருளில் நடந்துவந்த மக்கள் பேரொளியைக் கண்டார்கள்; சாவின் நிழல் சூழ்ந்துள்ள நாட்டில் குடியிருப்போர் மேல் சுடர் ஒளி உதித்துள்ளது" (எசாயா.9/2) என்ற இறைவாக்கினரின் முன்னறி விப்பு எம் செவிகளில் விழுகின்றபொழுது மனங்களில் பூரிப்பும், மகிழ்ச்சியும் நிறைகின்றது. ஏனெனில் கிறிஸ்து பிறப்பு விழாவைக் கொண்டாட மீண்டும் எமக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. மார்கழி மாதம் என்றதுமே உலகமெங்கிலும் கிறிஸ்து பிறப்பு விழா நிகழ்வுகள், ஆயத்தங்கள், பரிசுப் பொருள் பரிமாற்றங்கள், வாழ்த்து மடல்கள் அனுப்புதல் போன்ற பல்வேறுபட்ட முன்னெடுப்புக்களோடு கிறிஸ்து பிறப்பு பெருவிழா வெகு விமரிசையாக கொண்டாடப்பட்டு வருகின்றது.

சாதி, சமய, இன, மொழி வேறுபாடுகளின்றி உலகமே மகிழ்ந்து, குதூகலித்து கிறிஸ்து பிறப்பு விழாவைக் கொண்டாடுகிறதென்றால், அதற்கு ஒரேயொரு காரணம்; கடவுளின் அளவுகடந்த அன்பு கிறிஸ்து பிறப்பிலே வெளிப்பட்டதுதான். கிறிஸ்து பிறப்பு விழா கடவுளின் அன்பை உலக மக்களுக்கு வெளிப்படுத்தும் பெருவிழா. கடவுளே மனிதனாகிய திருவிழா. கண்ணால் காண முடியாத கடவுளை, இயேசுவில் கண்டு அனுபவிக்கும் மகிழ்ச்சியின் விழா. கடவுள் இவ்வுலகை எவ்வளவு அன்பு செய்தாரென்றால்; தம் ஒரே மகனையே நமக்காக, நம் மீட்புக்காக அனுப்பும் அளவுக்கு அன்பு செய்தார் (யோவான். 3/16).

அன்பு என்பது கண்ணிலே பிறந்து, இதயத்தில் நுழைந்து, உயிரோடு கலக்கின்ற உறவு. இந்த அன்புறவை கிறிஸ்து பிறப்பு பெருவிழாவை கொண்டாடும் நாமும் மற்றவர்களை அன்பு செய்ய, அன்பை பகிர்ந்து கொள்ள அழைக்கப்படுகின்றோம். கிறிஸ்து எவ்வாறு பேரொளியாக, சுடரொளியாக மிளிர்ந்து, காரிருளையும், சாவின் நிழலையும் தகர்த்தெறிந்தாரோ அதேபோல கிறிஸ்து பிறப்பு விழாவைக் கொண்டாடும் நாங்களும் இருள் சூழ்ந்த இந்த உலகை ஒளி மயமாக்க எம்மை அர்ப்பணித்து வாழத் தயாராவோம். நாம் வாழும் சமூகத்தில்;

உள்ளம் உடைந்தவர்க்கு உரமூட்டும் ஒளியாக.......
சிறைப்பட்டவர்களுக்கு விடுதலை தரும் ஒளியாக.......
பசித்தவனுக்குப் பகிர்ந்து கொடுக்கும் ஒளியாக......விழி இழந்தவருக்கு வழிகாட்டும் ஒளியாக......ஆண்டவரின் அருளைப் பெற்றுத்தரும் அறிவின் ஒளியாக..... ஏழைகள்மீது மனமிரங்கும் ஒளியாக......இரக்கமற்றவர்களை இளகச் செய்யும் ஒளியாக.....பாவிகளை வளர்த்துக் கொள்ளத்தான் கடவுள் மனிதனானார். இறைவன் தன் அன்பை வெளிப்படுத்த பல முறைகளைக் கையாண்டார். பல நீதிபதிகளை அனுப்பினார். அரசர்களை நியமித்தார். இறைவாக் கினர்களை அனுப்பினார். இறுதியாக நம்மில் ஒருவராக, மனிதராக உருவெடுத்தார். அதனால்தான் எபிரேயருக்கு எழுதிய திருமுகம் இவ்வாறு சொல் கிறது...." பற்பல முறையிலும் பல்வேறு வகையிலும் முற்காலத்தில் இறைவாக்கினர் வாயிலாக நம் முன்னோரிடம் பேசிய கடவுள் நாம் வாழும் இவ் விறுதி நாட்களில் நம்மிடம் தம் மகனின் வாயிலாகவே பேசியுள்ளார் (எபிரேயர். 1/1-2).

கண்ணால் காண முடியாத கடவுளின் அன்பை, நாம் அனைவரும் கண்டு, உணர்ந்து, அனுபவித்து வாழத்தான் கடவுள் தம் மகனை மனிதனாக அனுப்பினார். இயேசு விலே தந்தையின் முழுமையான அன்பு வெளிப்படுகிறது. தாம் படைத்த மனிதர் பாவத்தால் தம்மைவிட்டு எவ்வளவு தூரமாக விலகிச் சென்றாலும், அவர்களைத் தேடி மீட்பதிலேதான் கடவுளின் அன்பு அடங்கியுள்ளது. அதனால் தான் கிறிஸ்து பிறப்பு பெருவிழாவை அன்பின் விழாவாக நாம் கொண்டாடு கிறோம். அன்பு தான் இன்ப ஊற்று; அன்பு தான் உலக மகா சக்தி; அன்பு தான் கடவுள் என்பதை நிரூபித்துக் காட்டும் விழாதான் கிறிஸ்து பிறப்பு பெருவிழா. கடவுளோடு இருந்தவர், கடவுளாயும் இருந்தவர் (யோவான். 1/1) தம்மை வெறுமையாக்கி, அடிமையின் தன்மை பூண்டு, மனிதருக்கு ஒப்பான (பிலிப்பியர். 2/7) ஒப்பற்ற விழா - கிறிஸ்து பிறப்பு பெருவிழா.

மன்னித்து ஏற்றுக் கொள்ளும் ஒளியாக.....வழி தவறியவர்களின் முன்னின்று வழிநடத்தும் ஒளியாக....இன்னல் நீக்கி இருள் அகற்றும் ஒளியாக.....அவனியில் அமைதியைப் பொழியும் ஒளியாக.....

நாம் மாற்றம் அடையும்போதுதான் கிறிஸ்து பிறப்பு பெருவிழா வழக்கமாக கொண்டாடுவதைப்போல் அல்லாமல் அர்த்தம் பெறும் விழாவாக அமையும். கிறிஸ்து பிறப்பு பெருவிழா நம் அனைவருக்கும் அன்பையும், மகிழ்ச்சியையும், சமாதானத்தையும் கொணர்வதாக.

அருட்தந்தை . பாலா பாலரெட்ணம்
செபமாலை தாசர் சபை (இரட்னபுரி இலங்கை)

1.

# கிறிஸ்து பிறப்புக்ககாலம் பகிர்வின் காலம்

கிறிஸ்து பிறப்புஒவ்வொருஆண்டும் நமக்குபல்வேறுசெய்திகளைதருகின்றது.கிறிஸ்து பிறப்புக் கொண்டாட்டம் கடவுள் மனிதர் மீதுகொண்டமட்டற்றஅன்பின் வெளிப்பாடென்றும்,உலகபாவ இருள் அகன்றுவாழ்வின் பேரொளிகிடைத்தநாளென்றும் கூறலாம். கிறிஸ்துவின் அவதாரம் கடவுள் மனிதர் மீதுகொண்டபேரிரக்கத்தின் வெளிப்பாடென்றும்,கிறிஸ்துவின் பிறப்பில் விண்ணகத்தோடுமண்ணகம் மகிழ்வுற்றதுஎன்றாலும் மிகையாகாது.

இவ்வாண்டுகிறிஸ்து பிறப்புபகிர்வினைநமக்குசொல்லித்தரும் ஒருஉன்னதவெளிப்பாட்டின் காலமெனநான் சிந்திக்கின்றேன். கடவுள் மனிதகுலத்தின்மீதுகொண்டஅளவுகடந்தஅன்பினால்,அவர்கள் பாவ இருளில் அப்படியே மூழ்கிவிடக்கூடாதுஎன்னும் உயரியநோக்குடன்அம்மனிதகுலமீட்பிற்காகதமக்கு இணையாக இருந்தஒரேமகன் இயேசுக்கிறிஸ்துவைமனிதஅவதாரம்,அதுவும் மிகவும் எளிமையானநிலையில்,எடுக்கச் செய்தார். “கடவுள் வடிவில் விளங்கியஅவர்,கடவுளுக்கு இணையாயிருக்கும் நிலையைவலிந்துபற்றிக்கொண்டிருக்கவேண்டியதொன்றாககருதவில்லை. ஆனால் தம்மையேவெறுமையாக்கிஅடிமையின் வடிவைஏற்றுமனிதருக்குஒப்பானார்.” ( பிலிப்பியர் 2:6-7). அதாவதுகடவுள் தனக்கெனவைத்திருந்தஅத்தனையையுமேமனிதருக்காகநிபந்தனையின்றிபகிர்ந்தளித்தார். இதன்மூலம் மண்ணகம் வாழ்வுபெற்றது,ஒளியூட்டப்பெற்றது,பாவமாசுகளையப்பட்டது,நம்பிக்கைதளிர்விட்டது,மொத்தத்தில் இப்பிரபஞ்சம் கடவுளின் பிள்ளைகளால் நிரம்பிமிளிர்ந்தது.

பகிரப்படாதுபதுக்கிவைக்கும்போதுபாவம் கூடு கட்டத் தொடங்குகின்றது. சுயநலம் சிறகடித்துபறக்கஆரம்பிக்கின்றது. எனவே இவ்வருமையானகிறிஸ்து பிறப்புக்காலத்திலேநாமும் பலவழிகளிலேபகிரத் தொடங்குவோம். வெறுமனேபணத்தையல்ல: அன்பை,அறிவை,ஆற்றலை,ஆன்மீகத்தை,அடக்கமானபண்புகளை. ஏழைக் கைம்பெண்ணின் இரண்டுசெப்புக் காசுடனானமுழுமையானபகிர்வு இறையாசீரைஅவளுக்குபெற்றுக் கொடுத்ததுபோல,நமதுதாராளமானபகிர்வும் அதேயாசீரைநமக்கும் பெற்றுத்தரவேண்டுமெனசிறப்பாகஆசிக்கின்றேன்.

அருட்பணி. ச. சத்தியராஜ் பங்குத்தந்தை வவுனியா

# திருவருகைக் கால ஒப்பனைத் தழை வளையம (ADVENT WREATH)

திருவருகைக் கால ஒப்பனைத் தழை வளையம் விவிலியத்தில் இறைவாக்கினர்கள் முன்னறிவித்த படி இறைமகன் மண்ணுலகில் மனித அவதாரம் எடுத்த அந்த திருவருகையை அடையாள முறையில் சித்தரித்துக்காட்டும் ஒரு விவிலிய இரத்தினச் சுருக்கமே திருவருகைக் கால ஒப்பனைத் தழை வளையம் ஆகும்.

இந்த திருவருகைக் கால ஒப்பனைத் தழை வளையம் வட்ட வடிவமாக அமைந்துள்ளது, வட்டத்திற்கு எவ்வாறு தொடக்கமும் முடிவும் இல்லையோ அதேபோல் பிறக்கும் இறைவனும் அவர் தந்தையுமானவர்க்கும் தொடக்கமும் முடிவும் இல்லை என்பதை வட்ட வடிவம் சித்தரித்து காட்டுகின்றது. ஆதாம் ஏவாள் மூலம் பாவ இருள் இந்த உலகை ஆட்சி செய்ய ஆரம்பித்தது. அன்றே கடவுள் இந்த பாவம் என்ற இருள் அகற்றும் ஒளியாக மெசியாவை அனுப்புவதாக வாக்களித்தார். (ஆதி 3:14-15) (இங்கு ஒளி கொடுக்கும் மெழுகுவர்த்திகள் ஒளியாம் இயேசுவை குறித்து நிற்கின்றன) கடவுளின் வாக்குறுதி நிறைவேற சுமார் 4000 நான்காயிரம் ஆண்டுகள் எடுத்தன (கலாத்தியர் 4:4) இங்கு இத் திருவருகைக் கால ஒப்பனைத் தழை வளையம் இருக்கும் நான்கு மெழுகு வர்த்திகளும் ஒன்று ஆயிரம் ஆண்டுகளை குறிப்பதால் நான்கு மெழுகு வர்த்திகளும் 4000 நான்காயிரம் ஆண்டுகளை குறித்து நிக்கின்றது.

திருவருகைக் காலம் நான்கு வாரங்களை கொண்டது முதல் இரு வாரங்களில் இரண்டு ஊதா நிற மெழுகுவர்த்திகள் இயேசுவின் வருகைக்கான செப தப தியாகங்களோடு கூடிய ஆயத்த வாரங்களை குறிப்பதாகவும், மூனறாவது வாரம் ரோஸ் அல்லது பிங் (rose or pink) மெழுகுவர்த்தி இயேசுவின் வருகை அண்மித்த மகிழ்ச்சியை குறிப்பதாகவும், மீண்டும் நான்காவது வாரம் மற்றுமொரு. ஊதா நிற மெழுகு வர்த்தி அண்மித்துள்ள இயேசுவின் வருகை அண்மித்த மகிழ்ச்சியை குறிப்பதாகவும் உள்ளது.

மீண்டும் நான்காவது வாரம் மற்றுமொரு. ஊதா நிற மெழுகுவர்த்தி அண்மித்துள்ள இயேசுவின் வருகைக்கான தீவிர செப தப தியாகங்களோடு கூடிய தீவிர ஆயத்தத்தை குறிப்பதாகவும் நான்கு கிழமைகள் நான்கு மெழுகுவர்த்திகளும் திருப்பலி வேளையில் பற்றவைக்கப்படுகின்றன. திருச்சபையின் பாரம்பரியத்தில் இவ் நான்கு திருவருகைக் கால ஒப்பனைத் தழை வளைய மெழுகு வர்த்திகளும் இன்றும் ஆழமான ஆர்தம் பொழிந்தவைகளாக காணப்படுகின்றன. திருச்சபையின் பாரம்பரியத்தில்

திருவருகைக் கால ஒப்பனைத் தழை வளையம் நான்கு மெழுகுவர்த்திகளும் இன்னும் ஆழமான ஆன்மீக அர்த்தங்களை தம்மகத்தே கொண்டுள்ளன. ஆவை

- முதல் திருவருகைக்கால ஞயிறு- நம்பிக்கையை குறித்து நிற்கின்றது அதாவது இவ் நம்பிக்கை மெசியாவின் வருகை குறித்து இறைவாக்கினர் மக்களுக்கு அளித்த நம்பிக்கை இதனால் முதல் வாரத்தில் பற்ற வைக்கும் ஊதா நிற மெழுகுவர்த்தி இறைவாக்கினர் மெழுகு வர்த்தி என்று அழைக்கப்படுகின்றது (prophets Candle )
- இரண்டாம் திருவருகைக்கால ஞாயிறு- விசுவாசத்தை குறித்து நிற்கின்றது. அதாவது. இவ்வாறு இறைவாக்கினர் முன்னறிவித்த இறைவனை தாங்கியவாறு அன்னை மரியாளும் புனித சூசையப்பரும் விசுவாசத்தோடு பெத்தலேகம் நகரை நோக்கி பயணமான அந்த விசுவாச பயணத்தை குறிக்கின்றது. இதனால் இரண்டாவது வாரத்தில் பற்ற வைக்கும் இரண்டாவது ஊதா நிற மெழுகுவர்த்தி "பெத்தலேகம் மெழுவர்த்தி என்று அழைக்கப்படுகின்றது (Bethlehem Candle)
- மூனடறாவது திருவருகை கால ஞாயிறு – மகிழ்ச்சியின் வாரம் அதாவது இறைமகன் மண்ணில் பிறந்தார் என்ற அந்த மகிழ்ச்சியின் செய்தி இடையர்களுக்கு அறிவிக்கப்பட்டது இதனால் நாமும் மிக அண்மையில் பிறக்க இருக்கின்றார் என்று மகிழ்ந்து நிற்கவேண்டும் என்பதே திருச்சபையின் செய்தி இதனால் மூன்றாவது வாரத்தில் பற்ற வைக்கும் மூன்றாவது றோஸ் அல்லது பிங் (Rose or ping) நிற மெழுகு வர்த்தி "இடையர் மெழுகு வர்த்தி (Shepherd's Candle ) என அழைக்கப்படுகின்றது.
- நான்காவது திருவருகைக்கால ஞாயிறு அமைதியின் சமாதானத்தின் வாரம் அதாவது "உன்னதங்களிலே கடவுளுக்கு மகிமை உண்டாகுக உலகில் நன்மனத்தோருக்கு அமைதி உரித்தாகுக (லூக் 2:8-13), என்று இயேசு பிறந்துவிட்டார், ஆகவே எங்கும் அவரது மக்களுக்கு அமைதி கிட்டும் என்று தூதர்கள் எமது இயேசு பாலன் அமைதியின் மைந்தனை எதிர்கொள்ள நாமும் அமைதியின் மக்களாக அவரது மந்தையின் ஆடுகளாக வாழ மனம் மாற வேண்டும் இதனால நான்காவது வாரத்தில் பற்ற வைக்கும் நான்கவாது ஊதா நிற (Purple Colur) மெழுகுவர்தி "சம்மனசு தூதர் மெழுகுவர்தி என்று அழைக்கப்படுகின்றது. (Angel Candle ) இன்னும் இன்று பலர் திருவருகைக் கால ஒப்பனைத் தழை வளையம் மையத்தில் பிறக்கும் தூய பாலன் இயேசுவை பிரதிபலிக்கின்றன ஐந்தாவதாக கிறிஸ்மஸ் நாளில் பற்ற வைக்க வெள்ளை நிற மெழுகு வர்திதியையும் திருவருகைக் கால ஒப்பனைத் தழை வளைய மையத்தில் பிறக்கும் தூய பாலன் இயேசுவை பிரிபலிக்கின்றன ஐந்தாவதாக கிறிஸ்மஸ் நாளில் பற்ற வைக்க வெள்ளை நிற மெழுகு வத்தியையும் திருவருகைக் கால ஒப்பனைத் தழை வளயத்தைச் சுற்றி வர நிற்கும் மற்றய நான்கு மெழுதிரிகளைக்கு மத்தியில் வைக்கின்றனர்.
- இன்னும் திருவருகைக் கால ஒப்பனைத் தழை வளைய வட்டத்தின் அடித்தளத்தின் பாரம்பரியமாக எவர் கிறீன் இலைகளைக் கொண்டுதான் மூடி அலங்கரிப்பர் இதன் அடையாளம்: இயேசுவோடு எங்களுக்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ள நித்திய வாழ்வு ஒருபோதும் மாறாது என்பதை குறித்து நிற்கின்றது.
- எனவே, திருவருகைக் கால ஒப்பனைத் தழை வளயமானது திருவருகைக்காலத்தில், எம்மை ஆன்மீக ரீதியாக ஆயத்தம் செய்து, பிறக்க இருக்கும் இயேசு பாலனை தகுதியான முறையில் எம் உள்ளங்களிலும் இல்லங்களிலுமு: தாங்குவதற்கு ஒரு ஆன்மீக வழிகாட்டியே, இதனால் தான் திருவருகைக் கால ஒப்பனைத் தழை வளயம் திருவருகைக்கால வழிகாட்டி என்று திருப்பபை அழைக்கின்றது.
- எனவே திருவருகைக்கால வழிகாட்டியாம் அட்வெண்ட் மாலையின் உள்ளார்ந்த அர்தங்களை புரிந்து அது காட்டும் ஆன்மீக வழி காட்டலை பின் பற்றி திருவருகையின் காலத்தில் எம்மை சரியான முறையில் ஆயத்தம் செய்து பிறக்க இருக்கும் இயேசு பாலனை தகுதியோடு வரவேற்போம் வாழ்வின் ஏற்போம்

Happy chris mass

Mary chris mass

நத்தாப் புதுவருட வாழ்த்துக்கள்

அருட்தந்தை. மைக்மிலன் மரியதாஸ்

(செபமாலை தாசர் சபை (இரட்ணபுரி இலங்கை)

1.

# நத்தார்ப் பண்டிகையைப் பற்றி அறிந்துகொள்வோம்

பேராசிரியர் பாலசுந்தரம் இயைளதம்பி

தமிழ்துறைத் தலைவர். அண்ணாமலைகனடாவளாகம்

தேவமகன் இயேசுகிறிஸ்து ஆண்டகை உலகிலுள்ள அனைத்துக் கிறிஸ்தவர்களுக்காகத் தன்னுயிரையே தந்து அவர்களின் தெய்வமாகவும் வழிகாட்டியாகவும் விளங்கிவரும் இயேசுவின் பிறப்பையும் அவரது அருளையும் கிறிஸ்தவமக்கள் போற்றும் புனித பண்டிகை யேநத்தார் திருநாளாகும். இப்புனித தினத்தை இயேசுவின் திருப்பிறப்பின் புனிதநாளாக உலகெங்கும் வாழும் கிறிஸ்தவர்கள் கொண்டாடுகின்றனர். நத்தார்ப் பண்டிகையின் தோற்றம் பற்றி அறிஞர்களிடையே பல்வேறுகருத்துக்கள் நிலவிவருவதும் நோக்கத்தக்கது. பண்டைக் காலத்தில் பிறசமயத்தைப் பின்பற்றிய ரோமர்கள் (Pagen population) வேளாண்மைத் தெய்வத்திற்குப் பனிக்காலத்தில் பெருவிழாநடத்தி வந்துள்ளனர். அவ்விழாவில் கிறிஸ்மஸ் மரமும் நட்டு அவ்விழாவைக் கொண்டாடியுள்ளனர். அம்மக்கள் கிறிஸ்த வர்களாக மதம் மாறியபோதுதம் விழாக்களிலும் கிறிஸ்மஸ் மரத்தையும் சேர்த்துக்கொண்டனர் எனவும் அறியப் படுகின்றது. அதன் பின்னர் அனைத்துக் கிறிஸ்தவர்களும் இம்மரத்தை நத்தார் பண்டிகை அலங்காரத்தில் முக்கியபொருளாகச் சேர்த்துக்கொண்டனர் என்ற செய்தியும் நத்தார்ப் பண்டியை வரலாற்றுடன் சேர்த்துக் கூறப்படுகிறது. இப்போது அமெரிக்காவில் மட்டும் ஒவ்வோராண்டும் 30–35 மில்லியன் கிறிஸ்மஸ் அலங்கார மரங்கள் விற்பனையாகின்றன என்றும், இம்மரங்களை வளர்ப்பதற்கென்றே அங்கு 21,000 மக்கள் தொழில் புரிகின்றனர்.

இயேசுகிறிஸ்துவின் பிறப்பை முன்னிட்டுக் கொண்டாடப்படும் இப்புனித விழாவைத் தமிழில் நத்தார்ப் பண்டிகை என வழங்குவது மரபாகிவிட்டது. இப்பண்டிகைத்தினத்தில் முக்கியமாக அனைத்துக் கிறிஸ்தவர்களும் தத்தம் தேவாலயங்களுக்குச் சென்று வழிபடுதல் கட்டாய நிகழ்வாகும். நத்தார் தினத்தில் குடும்ப உறுப்பினர் ஒன்றாய்க் கூடுதல் ,வீட்டை கிறிஸ்மஸ் மரம், மின்விளக்கு, மற்றும் அலங்காரப் பொருட்கள் என்பவற்றால் அலங்கரித்தல், வழிபாடு செய்தல், உற்றார் உறவினர்களுக்கு வாழ்த்துக் கூறுதல் ,பரிசுப் பொருட்கள் பரிமாற்றம் செய்தல், கூட்டாக விருந்துபசாரங்கள் நடத்துதல், இசைவாத்தியக் கருவிகளை இசைத்து மகிழ்தல், கறோல் பாட்டிசைத்து கூட்டு வழிபாடு செய்தல் எனப் பல்வேறு மகிழ்ச்சிகரமான நிகழ்வுகள் நடைபெற்றுக்கொண்டேயிருக்கும். குறிப்பாகச்சிறப்பானமுறையில் உணவுகள் தாயாரிக்கப்பட்டு உற்றார் உறவினர் நண்பர்களுடன் இணைந்து கிறிஸ்மஸ் ஒன்று கூடல் என்ற பெயரில் உண்டாட்டுக் களியாட்டு நடத்துதலும் நத்தார்ப் பண்டிகையில் உச்சமாகக் காணப்படும். நத்தார் விருந்தில் வான்கோழி இறைச்சி உணவுஎல்லோராலும் பெரிதும் பேசப்படும் ஒருவிடயமாக அமைந்திருக்கும். இத்தனை நிகழ்வுகளும் இயேசுபிரானை நினைவிற்கொண்டே நடைபெறுகின்றன என்பதைக் கருத்திற்கொள்ளவேண்டும். இக்கொண்டாட்டத்துடன் புதுவருடக் கொண்டாட்டமும் இணைந்துவிடுகிறது.

உலகில் ஒருசிலமதத்தவர்களைத் தவிர்ந்த அனைத்துமக்களும் கிறிஸ்மஸ் பண்டிகையைக் கொண்டாடுகின்றனர் என்பதே இப்பண்டிகையின் தனிச் சிறப்பாகும். பொதுவாக, எல்லோருக்கும் அரசவிடுமுறைகிடைக்கின்றது. உலகம் கிராமமாக (Global Village)மாறியபின்னர்,எல்லோருக்கும் கிறிஸ்தவநண்பர்கள் இருக்கிறார்கள். எல்லோரும் நத்தார் வாழ்த்துக்களையும் புதுவருட வாழ்த்துக்களையும் வாய்மொழியாகவும், வாழ்த்துமடல்கள் மூலமாகவும் வாழ்த்துக் களைத் தெரிவித்துக்கொள்கிறார்கள். இவ்வாழ்த்துக்கள் ஊர் கடந்து, நாடுகள் கடந்து. மதங்கள் கடந்து நடைபெற்றுக்கொண்டே இருக்கின்றன. ஊதாரணமாக நான் சைவ சமயத்தைச் சேர்ந்த ஒருவர். எனது பேராசிரியர் களில் ஒருவர் கத்தோலிக்கர். இங்கிலாந்திலுள்ள ஷெப்பீல்ட் பல்கலைக்கழகத்தில் 1992 ஆண்டில் இருவருக்கும் நட்புஏற்பட்டது. அன்றுமுதல் இன்றுவரை இருவரும் நத்தார் புதுவருட வாழ்த்து மடல்களை ஆண்டுதோறும் பரிமாறிக் கொண்டிருக்கிறோம். இது போன்றே உலகிலுள்ள மக்கள் அனைவரும் தத்தம் நட்பையும் உறவையும் புதுப்பிக்கவும் தொடரவும் வாய்ப்பாக நத்தார்ப்பண்டிகை அமைவது இதன் சிறப்புக்களில் ஒன்றாகக் கருதலாம்.

ஊலகளாவிய நிலையில் பலகோடிமக்கள் நத்தார்ப் பண்டிகைகொண்டாடி வருகின்றனர். இப்பண்டிகையின் தோற்றம் பற்றி உறுதியானகருத்துக்கள் முன்வைக்கப்படவில்லை என்பதை இணையத்தளங்கள் தரும் செய்திகளின் மூலம் அறியக் கூடியதாக உள்ளது. இப்பண்டிகை முதன் முதலாகப் பலஸ்தீனத்தில் கொண்டாடப்பட்டதாகவும் கூறப்படுகிறது. இப்பண்டிகைஏன் டிசெம்பர் மாதம் 25ஆம் திகதி கொண்டாடப் படுகிறது என்றவினாவும் எழுப்பப்படுகிறது. நத்தாரப் பண்டிகை ஒழுங்கு முறைகள் அனைத்தும் ரோமானியரைப் பின்பற்றி வளர்ந்தனவாகவே கூறப்படுகிறது. பண்டைய ரோமானியர் சூரிய வழிபாட்டை நடத்தி வந்தனர் என்றும், பின்னாட்களில் அதற்குப் பதிலாக இறைமகனாம் இயேசுநாதரைவழிபடத் தொடங்கினர் எனவும் அறிஞர் கூறுவர்.

கி.பி. 432இல் கிறிஸ்மஸ் கொண்டாட்டம் எகிப்தில் ஆரம்பித்து,கி.பி. ஆறாம் நூற்றாண்டின் இறுதியில் இங்கிலாந்திலும் பரவியதுஎனவும் அறியப்படுகிறது. ரோமானியப் பேரரசன்கொன்ஸ்ரன்ரைன் காலத்தில் முதன்முதலாகக் கி.பி. 336 டிசெம்பர் 25ஆந் திகதிகிறிஸ்மஸ் பண்டிகைகொண்டாடப்பட்டது என்ற செய்தியும் அறியக்கிடைக்கிறது.

அதற்குச்சில ஆண்டுகளுக்குப் பின்னர் போப்பாண்டவர் முதலாம் ஜுலியஸ் என்பவர் இயேசுவின் திருப்பிறப்பைடி செம்பர் 25ஆந் திகதி கொண்டாடுவதாக அறிவித்துள்ளார் பின்னர் ஆட்சிபீடமேறிய ரோமப் பேரரசர் ஜஸ்ரினியன் (Justinian)என்பவர் கி.பி. 529இல் கிறிஸ்மஸ் தினத்தை விடுமுறைநாளாகப் பிரகடனப்படுத்தியுள்ளார். அதன் பின்னரே டிசெம்பர் 25ஆந் திகதி உலகளாவிய நிலையில் பலகோடி மக்களால் நத்தார்ப் பண்டிகை கொண்டாப்படும் நிலையை அடைந்துள்ளது. கி.பி எட்டாம் நூற்றாண்டில் ஸ்காந்திநேவியன் நாட்டினரும், Orthodox Church சார்ந்தகிரேக்கம் மற்றும் ரூஷியநாடுகளிலும் டிசெம்பர் 25ஆந் திகதிக்குப் பிற்பட்ட 13 நாட்களை நத்தார்ப் பண்டிகையாகக் கொண்டாடிவருகின்றனர். இங்கிலாந்தில் 1834இல் முதன் முறையாகநத்தார்ப் பண்டிகைக்கு வங்கிவிடுமுறைவழங்கப்பட்டுள்ளது. அதேபோன்று 1871இல் Boxing Day விடுறைவழங்கப்படுவதாயிற்று.

ஐரோப்பாவில் 17ஆம் நூற்றாண்டில் ஏற்படுத்தப்பட்டமதச் சீர்திருத்தங்களால் (மதமறுமலர்ச்சி) நத்தார்ப் பண்டிகையிலும் பலமாற்றங்கள் ஏற்படுத்தப்பட்டன. இங்கிலாந்தில் ஒலிவர் கோர்ண்வால் தலைமையிலான மதக்குழுநத்தார்ப் பண்டிகையைச் சிலகாலம் தடை செய்திருந்தது. அதன் பின்னர் ஆட்சியாளராகிய இரண்டாவது சாள்ஸ் மன்னர் மக்களின் வேண்டுகோளுக்கு அமையமீண்டும் நத்தார்க் கொண்டாட்டத்தை மக்கள் பின்பற்ற அனுமதி அளித்தார். அமெரிக்காவிலும் கி.பி. 1659 – 1681 வரைநத்தார்ப் பண்டிகை அரசினால் தடை செய்யப்பட்டிருந்தது. ஆனால் அமெரிக்கப் புரட்சியின் வெற்றியின் பின்னர் மீண்டும் நத்தார்ப் பண்டிகையைக்கொண்டாட மக்களுக்கு அனுமதி அளிக்கப்பட்டதோடு, முதன்முறையாக அதற்கு அரச விடுமுறையும் கொடுக்கப்பட்டது.

சாள்ஸ் டிக்கென்ஸ் என்றபிரபல ஆங்கில எழுத்தாளர் நத்தார்ப் பண்டிகைக்கு முதன்மை அளித்து‘A Christmas Carol’என்னும்ஆங்கிலநாவலைஎழுதினார். அந்நாவல் நத்தார்ப் பண்டிகையின் உட்பொருளாக குடும்பமைய விழா, குடும்பவிழுமியம் பேசப்படும் விழா,மக்களைஅறச் செயல்களில் ஈடுபடுத்தல், கருணை உள்ளம் என்ற விடயங்களுக்கு அழுத்தம் கொடுத்திருந்தது. ‘Merry Christmas’என்றவாசகமும் அந்நாவலின் மூலமே பிரபல்யம் பெற்றதுஎனக் கூறப்படுகிறது.

நத்தார்ப் பண்டிகையைத் தொடர்ந்துவரும் Boxing Dayமக்களால் பெரிதும் எதிர்பார்க்கப்படும் நாளாக அமைந்துவிட்டது. Boxing Day என்பது நத்தார்ப் பண்டிகையில் வழங்கப்படும் பரிசுப் பொதியைக் குறிப்பதாகும். இப்பரிசுப் பொதிகளைத் தொழிலாளர்களுக்குத் தொழில் அதிபர்கள் வழங்க, அவர்கள் அவற்றைத் தம் வீடுகளுக்கு எடுத்துச் செல்வர். அத்துடன் தேவாலயங்களில் நிதிசேகரிக்கப்பட்டு, பரிசுப் பொருட்களை வாங்கிப் பெட்டிகளில் பொதியாகவைத்து, ஏழை எளியவர்களுக்கு அப்பரிசுப் பொதிகள் வழங்கப் பட்டுள்ளன. இப்பரிசுப் பொதிகளை‘பொக்ஸிங்’தினத்தில் திறந்துபார்த்து மகிழ்வது அக்கால வழக்கமாக இருந்தது. அதனைத் தொடர்ந்து இங்கிலாந்திலும் அயர்லாந்திலும் Boxing Day டிசெம்பர் மாதம் 26ஆந் திகதி விடுமுறைநாளாப் பிரகடனப்படுத்தப் பட்டது. அதனைத் தொடர்ந்து முதன் முதலாக இத்தினம் உண்டாட்டுக் களியாட்டங்களுடன் கொண்டாடப் படுவதாயிற்று. இம் மரபுகள் அனைத்தும் இங்கிலாந்தில் தொடங்கியவை என்பதை Boxing Day பொருட்கள் வாங்கச் செல்வோர் கருத்திற்கொள்ளவேண்டும். இப்போது உலக நாடுகளில் இத்தினம் பெரும் வணிகத் தாபனங்களின் மலிவு விற்பனை நாளாக மாறிவிட்டமை மக்களின் எண்ணச் சிந்தனையின் மாற்றத்தைக் குறிப்பதாகும். இத்தினத்தில் மக்கள் அதிகாலையில் எழுந்து மலிவுவிலையிற் பொருட்களை வாங்குவதற்காக அணி அணியாகவரிசையில் காத்து நிற்பதைக் காணக் கூடியதாக உள்ளது.

உலகின் பலநாடுகளிலும் நத்தார்ப் பண்டிகையை முன்னிட்டுத்தபால் தலைகள் வெளியிடப்படு வதுவழக்கமாகிவிட்டது. கனடா 1898இல் நத்தார்ப் பண்டிகை நினைவு முத்திரை வெளியிட்டமை குறிப்பிடத்தக்கது. இப்போது ஒவ்வொரு ஆண்டும் அமெரிக்காவும். கனடாவும் நத்தார்ப் பண்டிகையைக் குறிக்கும் முத்திரைகளை வெளியிட்டு வருதல் குறிப்பிடத்தக்கது.

பொதுவாக நத்தார்ப் பண்டிகை காலங்களில் தேவாலய வழிபாடுகளுடன் மதம் சார்ந்த கலை நிகழ்ச்சிகள் இடம் பெறுவது வழக்கமாகும். இவ்விழாக்களில் கிறிஸ்மஸ் தாத்தாபிள்ளைகளுக்குப் பரிசுப் பொருட்கள் வழங்கும் நிகழ்வையும் காணலாம். கனடாவில் பல ஆண்டுகளாக இயங்கிவரும் திருமறைக் கலாமன்றம், பைபிள் கதைகளைத் தழுவிய நாடகங்களை மேடை ஏற்றி வந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. இப்பணிகளில் முக்கியமாக அம்மன்றத்தைச் சேர்ந்த எலியாஸ் அருளானந்தம். அன்ரன் பீலிக்ஸ், டொமினிக் முதலியோரது பணிகள் குறிப்பிடத்தக்கவை. தமிழ்த் தேவலயங்களில் ஆண்களும் பெண்களும் சேர்ந்து வழங்கும் கரோல் பக்திகீதம் வானொலிகளிலும், தொலைக்காட்சிகளிலும் இடம்பெற்று வருதலும் வழக்கமாகும்.

1.

# இயேசு புகழ்பாடும் தமிழ் இலக்கியங்கள்.

இயேசுகிறித்துவின் புகழ்பாடும் தமிழ் இலக்கியங்கள் தமிழிலக்கிய வரலாற்றினை சங்ககால இலக்கியம், சங்கம் மருவியகால இலக்கியம், களப்பிரர் கால இலக்கியம்,பல்லவர்கால இலக்கியம்,சோழர்கால இலக்கியம் மெய்விளக்ககால இலக்கியம்,ஐரோப்பியகால இலக்கியம், இருபதாம் நூற்றாண்டுகால இலக்கியம் எனவகுக்கலாம் என்பதுபொதுவாகஏற்றுக் கொள்ளப்படுகிறது. களப்பிரர் காலத்தை இருண்டகாலமாககொள்ளப்படுகிறது. விதிவிலக்காகபுனிதவதியார் புகழ்பாடுவோம் என்றமுறையில் “பிறவாமைவேண்டும் மீணடும் பிறப்புண்டேல் உன்னைமறவாமைவேண்டும்”என்றுபாடியகாரைக்காலம்மை யாரைஎளிதில் மறக்கமுடியாது.

கிறித்தவ இலக்கியத்தைஎண்ணுகையில் கிறித்தவம் பரப்பவந்தமேலைநாட்டார் தமிழுக்குசெய்ததொண்டினைநாம் குறித்தே ஆக வேண்டும். திருவாசகமொழிபெயர்ப்பு,திருக்குறள் மொழிபெயர்ப்புப் போன்றவற்றைஆங்கிலத்தில் வழங்கிதமிழின் பெருமையைஉலகுக்குவழங்கியபோப்பையரைநாம் மறக்கமுடியாது. பாதர் பெஸ்கிஎன்றஇத்தாலிப் பெரும் புலவர் எல்லைமீறியதமிழ்ப் பற்றின் காரணமாகவீரமாமுனிவர் எனதன் பெயரைமாற்றிக் கொணடார். அவர் தேன் சொட்டும் தேம்பாவணிபோன்ற நூல்களைவழங்கிகாவியம் படைத்தகம்பனைநினைவுபடுத்திய இப்பெருமகனைஎளிதில் மறக்க இயலாது. திராவிடமொழியின் ஒப்புவமைஎன்றஒப்பற்றஆய்வு நூலைவழங்கிதமிழின் தனித்துவத்தைநிலைநாட்டமறைமலைகளஅடிகள்போன்றமொழியியல் அறிஞர்களுக்குவழிவகுத்தவரலாற்றையும் வரலாற்றுஉணர்வோடுநினைவுகூர்கின்றோம்.

அதேவேளையில் கிறித்தவம் தழுவியதமிழ் அறிஞர்களாகியவேதநாயகம்பிள்ளை,கிருட்டினபிள்ளை,ஞாலம் அளந்தமொழிஆய்வாளர் ஞானப்பிரகாசர் அடிகளையும் பன்மொழிவல்லுனர் தாவீதுஅடிகளையும் தமிழால் உலகாணடதனிநாயகம் அடிகளாரும் என் நினைவலைகளில் மோதுகிறார்கள். அதேஇவேளையில் அர்த்தமுள்ள இந்துமதத்தையும் இயேசுகாவியம் தந்தகவிஞர் கண்ணதாசனையும் நாம் மறக்கநினைத்தாலும் மறக்கமுடியாது. கண்ணதாசனையொட்டியும் அவரைவிஞ்சும் நிலையிலும் இயேசுமாகாவியம் தந்தநிர்மலாசுரேசுவையும் நாம் நினைவில் நிறுத்தியாகவேண்டும்.

இயேசுகிறித்துவின் இராயிரத்துப் பதினேழாம் ஆண்டுபிறந்தநாளினைமாறுபட்டு கூறுபட்டுவேறுட்டுகிடக்கின்றமக்கள் ஒன்றுபட்டுதனக்குவமை இல்லாதான் தாள் போற்றுவோம் என்று இயேசுகிறித்துவின் புகழ் பாடுகின்றார்கள். இவ்வேளையில் கவியரசுகண்ணதாசனைஅழைத்துகுழந்தை இயேசுவைதாலாட்டும் படிவேண்டுகின்றபோதுஉளம் உள்ளமெல்லாம் நிறைவடைகிறது. இதோஅவர் தரும் தாலாட்டு“சோதிமணிப் பெட்டகமேசுடர் ஒளியே யூதருக்கு

ஆதிமகனாய்ப் பிறந்த அருந்தவமே தாலேலோ”

என்றுஅவர் பாடுகின்றதாலாட்டோடுநாம் சேர்ந்துபாடுகையில் ஏற்படுகின்றஉள்ளநிறைவுக்குஎல்லை இல்லை. இதேகண்ணதாசன் அவர்கள் இயேசுகிறித்துஏன் பிறந்தாரைஎன்பதைஏற்றமுறையில் எடுத்துரைக்கிறார்.

இதோ “நாதன் மனுவாய் நம்மிடைவாழ்ந்தார்
அவரதுமாடசியைஅனைவரும் கண்டோம் அருளும்
உண்மையும் அவராய் விளங்கினார் இந்த
உண்மையைஎன்றும்நாம் அறிவோம்.”

என்று இயேசுகிறித்துபற்றி இயம்பும் கண்ணதாசன் மெய்யியல் விளக்கமாக“எளியமனத்தோர் பேறுபெற்றோர் என எடுத்தும் அவர் சொன்னர் -இதில் எளிமைஎன்பதுபற்றில்லாமல் என்றுமேலும் விளக்கம் தந்துள்ளார். கண்ணதாசன் மேலும் இயேசுவின் பெருமையைவிளக்குகையில்

“அறிஞர் போல் தோன்றும் மூடர் ஆயிரம்
கேள்விகேட்பார் உண்மைசொல்பவன் உலகப் பகைவன்
நன்மைசெய்பவன் நாளும் விரோதிஇதுதான் அன்றே
இழிந்தவர் நீதி”

என்றுஉலகமக்கள் மனநிலையைகண்ணதாசன் அப்படியேபடம் பிடித்துக் காட்டுகிறார். கண்ணதாசன் மெய்விளக்கக் கவிஞர் என்றநிலையில்

“தன்னறிவில் உயர்ந்தோர்கள் தழைத்துநின்றார்

தடுமாறிவீழ்ந்தோர்கள் தெருவில் வீழ்ந்தார்

மன்னனையும் மக்களையும் பிரித்துப் பார்த்தார்

மணடத்தில் நான்குவகைதானேஉண்டு”

என்றுதத்துவத்தின் உச்சத்தில் நின்றுகவிஞர் தரும் கருத்துநம்மைஆழச்சிந்திக்கவைக்கிறது.

கண்ணதாசனின் இயேசுகாவியம் - படைப்பியல் என்றதலைப்பில் உலகத்தமிழ் ஆரய்ச்சிநிறுவனத்தின் பேராசிரியர் முனைவர் அன்னிதாமஸ் தந்துள்ளகட்டுரைதொட்டதெல்லாம் பொன்னாகும்

முறையில் எம்மைத் தனியுலகத்திற்குஅழைத்துச் செலகிறார்.

கவிஞர் நிர்மலாசுரேசுதனது இயேசுமாகாவியம் எனும் நூலில் இயேசுவின் தேசம் என்றகவிதையில்

"இயேசுவுக்குஎன்றொரு தேசம் உண்டு அதன் பெயர் நேசம்! அங்கேவேதனைகளே வெண்கொற்றக் கொடை!

சுமைகளேசிறகுகள்! மன்னிப்பேதண்டனை!

சமத்துவந்தான் விசா! மொழிதான் படை!

வானமே எல்லை!

அவருடையஉரைக்குள்ளேயேவாள் இருந்தது.

ஊமைமக்களின் குரலாய் இருந்தார் குறளாய் இருந்தார் மகுடங்களை இதயங்கள் ஆக்கினார் இதயங்களை மகுடங்கள் ஆக்கினார்!

ஆன்மீகத்தில் அரசியலைப் புகுத்தியவர் நடுவே அரசியலுக்கு ஆன்மீகம் தந்தவர்!

இக்கட்டுரையாளரைபலர் கேடகும் கேள்விஅரசியல் தலைவர்கள் பலரும் அரசியலில் ஆட்டம் காணகின்றபோதுநீங்கள் எப்படிநிலைத்துநிற்கின்றீர்கள்? என்பதுதான். அதற்குநான் கூறியவிளக்கம் எனதுஅரசியல் ஆன்மீகத்தின் அடித்தளத்தில் இருப்பதனால் ஆட்டம் காணவில்லைஎன்று. கேட்டவர்கள் அமைதிமேற்கொண்டனர்.

இயேசுமுந்திப் பிறந்தவர் பந்தயத்தில் அவருடன் ஓடித்தோற்றது காலம்! பைபிளின் கிறித்துஒருமதத்துக்குசொந்தமானவர்!

வரலாற்று இயேசுவோவையத்துக்கேபொதுவானவர்! நினைவில் வைப்போம் வெட்டப்படும் மரங்கள் தாம் சிலுவைகள் ஆகின்றன!

வெள்ளியிலும் தங்கத்திலும் உருவாகுவதில்லை சிலுவைகள். சிலுவைஎன்பதேஒருசித்திரஎழுத்து!

அந்தவடிவம் வேதத்ததை இலக்கியமாக்கியது.

இலக்கியத்தைவேதமாக்கியது!

இயேசுஎன்பவர் அவதாரமா?

அல்லதுபிறவியா? தெரியாதுபலருக்கு!

அவரோர் அகிலக் கோட்பாடுஎன்பதுமட்டும் எல்லோருக்கும் புரிகிறது!

அவர் யூதராய் தான் பிறந்தார்,ஆனால் யூதர்கள் அவரைப் பின் பற்றவில்லை. அவரும் பிதாவைநோக்கித்தன் செபித்தார். எனினும்

1.

அதேபிதாவின் பக்தர்கள் தான் அவருக்குஎதிரிகள் ஆனார்கள். எல்லோரும் வேதங்களுக்கு பொழிப்புரைதந்தனர். யேசுவின் பேச்சுக்களோ வேதங்களுக்குபொழிப்புரையானது.

இயேசு இவ்வுலகில் முப்பத்துமூன்றரைஆண்டுகள் தான். அவரதுமுதல் முப்பதுஆண்டுகள் எத்தகையதுஎன்பதுஎவருக்கும் தெரியாது. பன்னிரண்டுஅகவையில் தேவாலயம் சென்றார் என்றசெய்திஒன்றேஅறியக்கிடைக்கின்றது. எனினும் அவரது இறுதி மூன்றரைஆண்டுகள் உலகவரலாற்றைமாற்றிவிட்டது.

அவர் சிலுவையில் அறைந்துசித்திரவதைக்குஆளாகியபோதுசித்திரவதைசெய் தவர்கள் யாதென்றுஅறியார். அவர்களைமன்னித்திடுகஎன்றுஅவர் கூறிய இறுதிக் கூற்றுமானிட இதயங்களில் நிலைத்து இடம் பெற்றுள்ளது.

## மா.க. ஈழவேந்தன்

முன்னாள் நாடளுமன்றஉறுப்பினர் இலங்கை

நாடுகடந்ததமிழீழஅரசுஉறுப்பினர்(கனடாபேராளர்)

# கிறிஸ்து பிறப்பு

அன்பென்னும் உணர்விலே அகிலமே நிலைத்திட

ஆதவன் தோன்றி விட்டான்

எங்கள் ஆண்டவர் தோன்றி விட்டார்

எங்கள் துன்பங்கள் தாங்கிட எங்கள் துயரங்கள் நீங்கிட

தூதுவன் தோன்றி விட்டார்

மாட்டுக் குடிலினிலே மரியன்னை மடியிலே மனிதனாய் பிறந்து விட்டார் இயேசு புனிதனாய் பிறந்து விட்டார்

அவர் தொட்டிலில் துயில்கையில் தேவர்கள் வாழ்த்தினர்

தேவனே பிறந்து விட்டார் எங்கள் ஜீவனாய் பிறந்து விட்டார்

விண்மீன்கள் வாழ்த்திட விண்இரவிலே விண்மீன்களாய் பிறந்து விட்டார் புது விடியலாய் பிறந்து விட்டார்

இந்த மண்ணிலே அன்பின் மகிமையை உணர்த்திட மெசியாவாய் பிறந்து விட்டார் இயேசு மெசியாவாய் பிறந்து விட்டார்

தட்சனின் மகனாக தத்துவ ஞானியாய் தெய்வமாய் பிறந்து விட்டார் அவர் தெய்வ மகனாய் பிறந்து விட்டார் அவர் பட்சலம் குழந்தையாய் பாவங்கள் நீக்கிட இந்தப் பாரினில் பிறந்து விட்டார் இயேசு எமக்காய் இந்த பாரினில் பிறந்து விட்டார்.

இதுவே கிறிஸ்மஸ் செல்வன் .லியோசன் லெவலின

1.

# விண்ணில் வாழும் இயேசுபாலா - மறுபடியும் மண்ணதிலே பிறந்து வாவா

இறைவனது சித்தமது விளங்கியது படைப்பதிலே
இன்பவாசை மறைத்தது மனிதரது கண்களினை
இருளினது ஆட்சியினால் மங்கியது ஒளிவாழ்வு
இழந்து நின்றார் மனுக்குலத்தார் தம்வாழ்வு
இரட்சிப்பு உண்டென்ற வாக்கினால் தேற்றியவர்
இஸ்ராயேல் குலமதனை தனக்கென தேர்ந்தெடுத்தார்
இன்றல்ல அன்றும் நிலவியது அடிமைவாழ்வு
இல்லா தொழித்திடவே மனுவானார் இறைமகனார்

காரிருளை அழித்திடவே கடவுளவர் கருவானார்
கன்னியவள் கருவினிலே கட்சிதமாய் உருவானார்
கலக்கமது கொண்டாலும் நம்பினாள் இறைவனையே
கருத்துடனே பணிந்து பதிலுரைத்தாள் தூதரின்முன்
கன்னிமரி நிலைகண்டு கலங்கினார் யோசேப்பு
கனவினிலே உண்மைகண்டு தெளிவு பெற்றார்
கடைசிவரை மாமரியை பாலனோடு காத்திடவே
கடவுளது திட்டமதால் உருப்பெற்றார் பாலகனார்

வானவர் வணங்கிடும் தூயநல் லமுதமாக
வாழ்விற்கு வழிகாட்ட மாந்தருக்கு ஒளியாக
வாக்கினை காத்திட வாய்மையை வென்றிட
வாசனை மலரெனவே வந்துதித்தார் இறைமைந்தன்
விண்ணவர் புகழ்ந்தேத்தும் கடவுளது ஓரேமகனாய்
விடுதலையை நோக்குவோவின் விழிகளில் விடியலாய்
விந்தையாக மானிடர்க்கு நல்வாழ்வை யளித்திடவே
விரைந்துவந்தார் மரிமைந்தன் நடுவானில் தண்மதிபோல்

ஆண்டாண்டு காலமதாய் ஆண்டவரின் பிறப்புநாளை
ஆவலுடன் நினைக்கின்றோம் கூடி மகிழுகின்றோம்
அன்பரவர் அடிச்சுவடு இந்த மண்ணதிலே
அடியெடுத்து வந்ததன் விந்தை யென்ன?

அழிந்து போகும் மக்களினம் மீட்புபெற்று
அன்பினது ஆட்சியது ஏற்றம் காண
மண்ணுலகம் விண்ணகம் போல் ஒளிதரவே
மன்னனவன் மனிதனானார் இப் பாரினிலே

அன்று தொட்டு இன்றுவரை மக்களினம்
அளிவுற்ற நிலைபோதும் இனியும் வேண்டாம்
நீண்டபெரும் துன்பமதை சந்தித்த எங்களினம்
நிம்மதியை கண்டிடுவார் பாலகனே உம்வரவால்
ஊனுறக்க மில்லாமல் அலையும் மாந்தர்
உண்டுறங்கும் நிலை வரட்டும் களைப்பாறட்டும்
உதயத்து தண்மதியாம் அமைதி வாழ்வை
உறுதியாக நிலைநாட்ட பாலகனே வந்தருளும்

தீமைகளை நினைப்பவர்கள் சமூகமதில் வாழ்வதேன்?
ஏழையுயிர் பறிப்பவர்கள் உலகினிலே பிறப்பதுமேன்?
நன்மைகளை நினைப்பவர்கள் நாள்தோறும் மடிவதேன்?
நலிந்தவரை காப்பவர்கள் நடுவழியில் மறைவதுமேன்?
உழைக்கும் மனிதர்கள் வாழ்வினில் உருகுவதேன்?
உண்மை நிலைகண்டும் உலகம்கண் மூடுவதேன்?
உன்னதராம் இறைவனது உரிமை மகனாரே
உரிமைவாழ்வை நாமடைய உடனிங்கு வந்திடுவீர்

நித்தியமாய் நிர்மலனாய் நிலவும் ஈசன்
நிறை மதியால் உருவான ஞானமேகம்
புத்திமன வாக்கினுக்கு எட்டா வாழ்வே
பூரணத்தின் முத்தொளியே எழுந்து வாராய்
அழிந்துபோகும் உலகதிலே ஆட்டம் காணும்
அன்பு அறம் நீதிநேர்மை காத்திடவே
உயிரளிக்கும் புத்தொளியே மரியின் மைந்தா
உம்வரவால் உயிர்பெறுவோம் எழுந்து வாவா

*அருட்தந்தை. யா. றமேஸ் அ.ம.தி*

1.

# 2018 ம் ஆண்டு நிகழ்ச்சி நிரல்கள்

## அன்புமக்களே

“அன்புமக்களே” கத்தோலிக்க மாதாந்த சஞ்சிகை மாதந்தோறும் வெளியிடப்படும். விரும்பியவர்கள் ஆக்கங்களை விளம்பரங்களையும் அனுப்பி வைக்குமாறும். சஞ்சிகை மாதாந்தம் பெறுவதற்கு சந்தா முறையில் இணையவும் கேட்கப்படுகிறீர்கள்.

## “பரம்பொருள்” தமிழ் கத்தோலிக்க வானொலி நிகழ்ச்சி

“பரம்பொருள்” ஒவ்வொரு வாரம் தோறும் கீதவாணி வானொலி ஊடாக நடைபெறும்.

இவற்றில் திருப்பலி வார்த்தை வழிபாடும் கேள்வி பதிலும் மாலை 7.00 மணிதொடக்கம் 8..00 மணி வரை நிறைவு செய்யப்படுகின்றன உலகம் முழுவதும் உள்ள தமிழ் மக்கள் செவிமடுக்கும் ஒரு தமிழ் கத்தோலிக்க நிகழ்வாகும். இந்த நிகழ்வை நீங்களோ அல்லது உங்கள் உறவினர்களோ வானொலிப் பெட்டி இல்லாவிட்டால் கனணியில் இணையத்தின் ஊடாகவும் கேட்கலாம்.(www.Geethavanee.com)

## சிலுவைப் பாதை

புனித லூர்து மாதா தேவாலயத்தில் தபசு காலத்தில் எங்கே சுமந்து போறீர் என்ற பழைய சிலுவைப் பாதைப் பாடல்களுடன் ஒவ்வொரு செவ்வாய்க் கிழமையும் மாலை 6.00 மணிக்கு சிலுவைப்பாதை நடைபெறும். இதுவும் கடந்த 32 ஆண்டுகளாக நடைபெறுகின்றது.

## ஞானொடுக்கம்

பங்குனி மாதம் 20ம் திகதி செவ்வாய்க்கிழமை சிலுவைப்பாதையுடன் திருப்பலியும் நிறைவேற்றப்படும். அன்றைய தினம் மாலை 6.00மணிக்கு சிலுவைப்பாதை ஆரம்பமாகி திருப்பலியுடன் மாலை 8.00மணிக்கு நிறைவடையும்.

பங்குனி மாதம் தவக்காலத்தின் 2ம் வாரம் முதல் சனிக்கிழமை 03ம் திகதி தவக்கால ஞானொடுக்கம். காலையில் 9ம் மணிக்கு ஆரம்பமாகி மாலை 6.00 மணிக்கு நிறைவுபெறும்.

## சிலுவைப் பாதையும் வயோதிபக் குருக்களையும் தரிசிப்பது.

சித்திரை மாதம் முதலாம் திகதி பிக்கிறிங்கில் 2325 லிவோர்ப்பூல் வீதியில் அமைந்திருக்கும் இயேசு சபைக் குருக்களின் தியான நிலைய வெளியரங்கில் அமைந்திருக்கும் சிலுவைப்பாதையும் அங்கு இருக்கும் வயோதிபக் குருக்களையும் தரிசிக்க இருக்கிறோம் வர விரும்புவோர் எங்களுடன் தொடர்பு கொள்ளுங்கள் தமிழில் நடைபெறும்.

## *போத்துக்கல் புனித பற்றிமா மாதா காட்சி கொடுத்த 101வது ஆண்டு விழாவுக்கு திருயாத்திரை*

### பற்றிமா மாதா காட்சி கொடுத்த 101வது ஆண்டை முன்னீட்டு நடைபெறும் 101 வது விழாவில் பங்கெடுக்க போத்துக்கல் செல்வதுடன் புனித லூர்து அன்னை தலத்தையும் தரிசிப்போம் வைகாசி மாதம் 11ம் திகதி. தொடக்கம் வைகாசி மாதம் 20ந் திகதி வரையும்.

புனித லூர்தன்னை திருத்தலம் பிரான்ஸ் நான்கு நாட்களும் போத்துக்கல் புனித பற்றிமா மாதா தேவலயத்தில் நான்கு நாட்களும் தங்குவோம் பிரான்ஸ் தமிழ் திருபயணிகளுக்கான ஆன்மீகக் குருவாக பணிபுரியும் அருட்தந்தை லீனஸ் சொய்ஷா அவர்கள் எங்களுடன் திருத்தல யாத்திரையின் போது வழிநடத்துபவராகம் ஞானக் காரியங்களை தமிழில் நிறைவேற்றுபவராகவும் எங்களுடன் இருப்பார் வர விரும்புகிறவர்கள் 2018ல் பங்குனி மாதம் 31ம் திகதிக்கு முன்பு எங்களுடன் பதிவு செய்ய வேண்டும் பதிவு செய்பவர்கள் தகுதியான கடவுச்சீட்டுகளின் இலக்கம் அவற்றில் உள்ள பெயர் போன்றவற்றுடன் பதிவு செய்யும்படி வேண்டிக்கொள்கிறோம்.

1.

## *புனித அந்தோனியார் திருவிழா லூர்துமாதா தேவாலயத்தில்*

புனித அந்தோனியார் திருவிழாவை முன்னிட்டு 11,12,ம் திகதிகளில் புனித லூர்துமாதா தேவாலயத்தில் ஆராதனைகளும் திருநாள் அன்று 13ம் திகதி திருவிழா ஆராதனையும் சுற்றுப்பிரகாரமும் நடைபெறும்

## *இலண்டன் யாத்திரை இல்லத்தில் மடுத்திருவிழா*

ஆடி மாதம் 1ம் திகதி செபமாலை தாசர் சபை வழிநடத்தும் இலண்டன் ஒன்ராறியோ யாத்திரைதலத்தில் மடுமாதா திருவிழா ஐந்தாவது வருடமாக நிறைவேறும் கனடா நாளாகவும் நாம சென்று கனடாக் கொடி, நமது கத்தோலிக்க மக்களின் கொடிகளை முறையே கனடாக் கீதத்துடன் கம்பத்தில் உயர ஏற்றி செப வழிபாடுகள் நிறைவு செய்து உணவுகள் பரிமாறி மகிழ்ந்து வருகின்றோம் ஒரு முறை வந்து பாருங்கள்.

## இலங்கை இந்திய சுற்றுலா

ஆடி மாதம் 02ம் திகதி தொடக்கம் 19ம் திகதி வரையும் இலங்கை இந்தியா நாடுகளின் சுற்றுலா நடைபெறும். 08 நாள் இலங்கையிலும் 08 நாள் இந்தியாவிலும் 16 இரவு ஹொட்டலில் தங்கி சுற்றுலா செய்வதற்கு அனுபவம் நிறைந்த வழிகாட்டிகளுடன் செல்வோம். வாருங்கள் வாழ்க்கையில் ஒரு முறை இரண்டு நாட்டினதும் இயற்கை வழங்களுடன் இணைந்து இயற்கை வழங்களை அனுபவிப்போம்.

## *மிட்லன் வேதசாட்சிகள் வருடாந்த யாத்திரை*

ஆடி மாதம் 21ம் திகதி சனிக்கிழமை கனடிய வேதசாட்சிகள் திருத்தல யாத்திரை செல்ல உள்ளோம் கடந்த முப்பத்தியொரு வருடங்கலாக பேரூந்து சேவைகள் ஒழுங்கு செய்துவருகின்றோம் தொடர்பு கொள்ளுங்கள்.எங்கள் தொலை பேசி இலக்கத்துடன்.

## கனேடிய தேசியத் திருயாத்திரை

ஆவணி மாதம் 4 .5. 6ம் திகதிகளில் ஆறுதல் அளிக்கும் ஆன்மீகத் திருயாத்திரை புனித சூசையப்பர் தேசிய யாத்திரைத் ஸ்தலம். புனித மேரி மெடலின் தேசிய திருயாத்திரை ஸ்தலம் புனித அன்னாம்மாள் தேசிய திருயாத்திரைத் ஸ்தலங்களுக்கு திருப்பயணம் நடைபெறும்.

## மடுத்திருவிழா மேரிலேக்கில்

ஆவணி மாதம் 18ம் திகதி மேரி லேக்கில் மடுத்திருவிழா நடைபெறும்.

## அமெரிக்கப் பயணம்

புரட்டாசி மாதம் 1ம் . 2ம் திகதிகளில் கிறோசிற்றி Back to school. புனித வெற்றி மாதா . புனித பற்றிமா மாதா .கண்மணி மாதா யாத்திரைப் பயணம் நடைபெறும்.

## புனித பூமிக்கான திருப்பயணம்.

ஐப்பசி மாதம் 11ம் திகதி தொடக்கம் 21ம் திகதி வரை எமது கடவுளாம் இயேசு ஆண்டவரை கண்டு கேட்டு தொட்டு அனுபவித்து புனித பூமியை முத்தி செய்து மூவொரு கடவுளைப் போற்றி புகழாரம் சூட்ட செல்கின்ற விசுவாச பயணமே புனித பூமிக்கான எமது பயணம் **தேவ அழைத்தலால் உந்தப் பட்டவர்கள் வாரீர்!**

# றோம் வற்றிக்கான், பதுவை இத்தாலி, மயூக்கோறி பொஸ்னியா. பிறாக்கு செக்கோ.

1.

கார்த்திகை 12ம் திகதி தொடக்கம் 25ம் திகதி புனித அந்தோனியார் தேவாலயம், குலந்தை இயேசுவின் திருத்தலம், மயூக்கோறியில் மாதா காட்சி கொடுக்குமிடம் கத்தோலிக்கரின் தலைமைத்துவ நகரம் செபஸ்ற்றியாரின் கல்லறை, யூவானியாரின் பசிலிக்கா, மரியாவின் பசிலிக்கா. போன்றவைகளுடன் சாய்ந்த கோபுரம், உலகின் அழகிய வெனீஸியன் தீவு. போன்ற இடங்கள் சென்று பார்வையிடுவோம்.

## ஞானஒடுக்கம்

புனித லூர்து மாதா தேவாலயத்தில் மார்கழி மாதம் 01ம் திகதி திருவருகைக் காலத்தின் ஞானொடுக்கம் இறை யேசுவின் வருகையின் இயல்புகளையும் பிறப்பையும் விபரும் பெற்று விசுவாசமடைய விளக்கங்களுடன் தியானமும் திருப்பலியும் நிறைவு செய்யப்படும்

## சிறுவர் ஒளிவிழா

புனித லூர்து மாதா பாடசாலையில் மார்கழி மாதம் 15ம் திகதி 2018ம் ஆண்டு சிறுவர்களுக்கான ஒளி விழா நடைபெறும். இவ்விழா உங்கள் பிள்ளைகளின் ஆற்றல் வளர்ச்சிகளை வெல்லோட்டம் செய்து வெளிப்படுத்த ஒரு சந்தர்ப்ப மேடையாக பணன்படுத்துங்கள்.

## திருப்பலி

லூர்து மாதா ஆலயத்தில் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் மாலை 5.00 மணிக்கு தமிழில் தொடர்ந்து 32 ஆண்டுகள் திருப்பலி ஒப்புக்கொடுக்கப்படுகிறது.

## தமிழில் நத்தார் திருப்பலி

24ம் திகதி இரவு 8.00 மணிக்கு  தமிழ் கரோல் பாடல்கள் அதனைத் தொடர்ந்து 8.30 மணிக்கு தமிழில் திருப்பலி நடைபெறும்.

## தமிழில் 2019ம் ஆண்டு புதுவருடத் திருப்பலி

31ம் திகதி இரவு 11.00 மணிக்கு தேவநற்கருணை எழுந்தேற்றம் (பாவ மன்னிப்பு வழிபாடும். நன்றி வழிபாடும்) நடைபெற்று அதனைத் தொடர்ந்து 12.00 மணிக்கு புதுவருட திருப்பலியும் நடைபெறும்.

A. மௌன ஞானோடுக்கம் மேரி லேக் ஆலயத்தில் நடை பெறும்.
B. உளவியல் கருத்தரங்குகள் (குடும்பம். உறவு. சூழல்)
C. போதைவஸ்துக்கு அடிமையானவர்களுக்கான உளவியல் கருத்தரங்குகள்

பெற்றோர். பிள்ளைகளுக்கு நடைபெறும்.

**மேலே தரப்பட்டுள்ள தகவல் அனைத்துக்கும் மேலதிக விபரங்கள் பெற விரும்புகிறவர்கள் தொடர்பு கொள்ளவேண்டிய தொலைபேசி இலக்கம்**

## 416 265 5540

# BRIDGE FOR TAMIL

# தமிழர்களின் உறவுப்பாலம்

## தமிழ் கத்தோலிக்க வெளியீட்டக செயற்பாடுகள்

சகல அரசசாசன விண்ணப்பங்கள் அனைத்தும் இங்கே நிரப்பிக்கொடுக்கப்படும்

குடியகல்வு கடிவரவு தொடர்பான வேலைகள் செய்து கொடுக்கப்படும்

போட்டோகொப்பி Black and White , Colour ல் இங்கு பெற்றுக்கொள்ளலாம்

"அன்பு மக்களே" சஞ்சிகை வெளியிடல்

புனித ஸ்தலங்களுக்கான யாத்திரை பயண ஒழுங்குகளைச் செய்தல்

பரம்பொருள் வானொலி நிகழ்வு வாரம்தோறம் ஒருமணி நேர நிகழ்ச்சி

ஆன்மீக நிகழ்வுகள், விசேட நிகழ்வுகள், விளம்பரங்கள் ஒலிபரப்பு செய்யப்படும

ஞானஒடுக்கம், தியானம், கருத்தரங்குகள் நடத்தப்படும்

Translation: ஆங்கிலம்- தமிழ் பொழிபெயர்ப்பு

**Tel: 416-265 -5540 Fax: 416-264-6353**

## Counseling

குடும்ப உளவளத்துணை குடும்பப்பிரச்சனைக்கு உதவும்

போதைவஸ்துக்கு அடிமையானவர்களுக்கான உளவளத்துணை பிள்ளைகள் பெரியோருக்கும் உதவும்